



ஓம்.

தத் சத்

பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீ கோவிலூர் மடாலயம்

முத்திராமலிங்க ஞாநதேசிகர் ஆதீநத்து

ப்ரஹ்ம வித்தியாப் பிரசாரண சபையின்

# துவிதீய சகாப்த ப்ரதீபநம்.

---

இது

ஷை சபையின் காரியதரிசி யவர்களால்

சென்னை,

கோமளேசுவரன்பேட்டை

சச்சிதாநந்தம் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1916.

ஓம்

பரப்ரஹ்மமணே நம:

# ஸ்ரீ கோவிலூர் மடாலயம்

## முத்திராமலிங்க ஞானதேசிகர் ஆதீநத்தில் ஸ்தாபித்திருக்கும் பிரஹ்மவித்தியாப் பிரசாரண சபையின் தாத்பர்யம்.



மூன்றுமின் ஞான்றே விருமையிற் பூன்ற முதல்வனே யனுபவப் படுவன்
றோன்றுச மாதி துயிலுறு மூர்ச்சை தோன்றுறு முன்னமு நிறைவே
மூன்றுறு வேறுங் கிஞ்சிவிற் சுகமின் முகிணிறை வெஃதது சுகமாம்
ஈன்றுறு துயர்கூர் நாரதற் கிவண மியம்பினன் சநற்குமா ரனரோ.

வேதமைஞ் சுரிய புராணம தோடு விவிதநூற் றெளிந்துந்தற் றெளியாத்
தீதிறு லதிக வாதைநா ரதனுஞ் செறிந்தனன் வேதமோ திடுமுன்
ஓதுமுத் தாப மாத்திரை யானே யுறுமஞர்ப் பின்னரப் யாசம்
ஒதிய மறத்த லிகழ்வொடு கருவ முறுதலான் மிகுதுய ராமே.

அவ்வியா னறிஞ! வலமரு கின்றே னஞர்க்கரை யென்னையீண் டடைவி
செவ்விதி னெனக்கேட் டிடமுநி சுகமே செறியிதன் கரையெனத் தெரித்
கவ்வுவை ஷயிக சுகமிடர் கோடி கலத்தலிற் றுன்பமே யென்று [தான்
இவ்விறை மதித்துக் கிஞ்சிவிற் சுகமின் றென்றவாய் மலர்ந்தரு ளினனே.

அறிவின்மிக்க அன்பர்காள்!

இச் சம்சார தாபத்தினின்றும் நீங்குவதற் குபாயம் வித்தை யொன்றேயாம்; வித்தியா விஹீநனைப் பசுவெனச் சாஸ்திரங்கள் கோஷிக்கின்றனவாகலின். அறுபத்து நான்கு கலைக்ஞானங்களையுமுடைய நாரதபகவான் துக்கம் நீங்காதவராய் ஸநத்குமார முநிவரை யடைந்து ப்ரஹ்ம வித்தையைச் சிரவணித்துத் துக்கத்தை நீக்கினரெனச் சுருதிகளாற் கேட்டேமாகலின், வித்தை யாவற்றுள்ளும் பிரஹ்ம வித்தையே உத்கிருஷ்ட மென நிச்சயமாகின்றது. அங்ஙனமே வேத சாஸ்திர பிரஸ்தாநத்திரயாதிகளின் சம்மதமுமாம். இப் பிரஹ்மவித்தையைக் கலிப்பிரபாவத்தால் உலகத்திலுள்ளவர்கள் அறியாதவர்களாயும் பெரும்பாலும் அதற்குச் சாதநமான சாஸ்திராப்பியாச மில்லாதவர்களாயும் ஜீவனோபாயங்களிலேயே காலத்தைக் கழித்து இச்சன்மத்தைப் பிறவா நாளாக்குகின்றனர். அவர்கள் உஜ்ஜீவித்தற்பொருட்டு பிரஹ்மவித்தியாப்பிரசாரணமென்று ஒரு சபை ஸ்தாபிக்க வேண்டுமென்று தற்காலம் ஷை யூரில் மடாதிபதியாயெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீ அண்ணாமலை ஞாநதேசிக சுவாமிகளவர்கள் கருத்திற்றோன்றி, கண்டனூர் நா. பெ நா. முத்துராமன் செட்டியாரவர்கள் முயற்சியால் பிரமாதீச ஞு பங்குனி மீ கோவிலூர் மடத்தை ஸ்தாபித்த ஸ்ரீமுத்திராமலிங்க ஞாந தேசிகசுவாமிகளவர்களின் பிரபாவம் விளங்குதற்கு ஷை குருபூஜையாய உத்திரநக்ஷத்திரத்தன்று மிகவிமரிசையாக ஸ்தாபிக்கப்பட்டது. அதுபோல் இச்சபையில் இராக்ஷஸ ஞு ஆடி மீ 25உ முதல் (9—8—15)

ஆவணிமீ 3உ வரையிலும் அறிவின்மிக்க அநேக சாதுக்களாலும், சாஸ்திரிகளாலும் மாலை 3-மணி முதல் 6-மணி வரை அநேக அரிய பெரிய பிரஹ்மவித்தியா சம்பந்தமான விஷயங்கள் மந்தர்கட்கும் புத்தியில் புலப்படுமாறு உபந்யாசிக்கப்பட்டன. பக்தகோடிகளனைவரும் வந்திருந்து சிரவணித்துப் பெரும் பேறான பிரஹ்மாநந்தம் அடைந்தார்கள். உபந்யாசர்கட்குத் தகுந்த பீதாம்பரம் திரவிய முதலிய சன்மானங்களும், மற்றையோர்கட்கு அவரவர்கட்குத் தகுந்த உபசரணையும் நடத்தினார்கள்.

ஆடிமீ 25உ முதல் 31உ வரை மாலையிலும் 32உ முதல் ஆவணிமீ 4உ வரை காலை மாலையிலுமாகப் பதினாறு உபந்யாசங்கள் நடந்தன.

விபரம்

| | |
|---|---|
| கோவிலூர் ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகள் | சாதுசங்க மஹிமை. |
| கோவிலூர் ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகள் | வியாஸதாத்பரிய நிர்ணயம். |
| காரைக்குடி ஸ்ரீ M.V. கோவிந்தராஜ ஐயங்கார் | குக பரத சமாகமம். |
| கோவிலூர் ஸ்ரீ காசிகாநந்த சுவாமிகள் | நைஷ்கர்ம்ய சித்தி. |
| கோவிலூர் ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகள் | பஞ்சாக்ஷர மஹிமை. |
| வலையபட்டி ஸ்ரீ திரு. இராமசாமி ஐயங்கார் | திருவிளையாடல். |
| கோவிலூர் ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகள் | பக்தி. |
| கண்டனூர் ஸ்ரீ சுப்ரமண்ய சாஸ்திரிகள் | சிவ மஹிமை. |
| நீடாமங்கலம் ஸ்ரீ சுப்ரமண்ய சாஸ்திரிகள் | குரு மஹிமை. |
| திருப்புத்தூர் ஸ்ரீ சுப்பய்ய சாஸ்திரிகள் | பஞ்சகோச விசாரம். |
| கோவிலூர் ஸ்ரீ சுப்ரமண்ய சாஸ்திரிகள் | அத்வைத சித்தாந்தம். |
| குன்றக்குடி ஸ்ரீ விஸ்வநாத சாஸ்திரிகள் | தத் த்வ மஸி விசாரம். |
| நீடாமங்கலம் ஸ்ரீ சுப்ரமண்ய சாஸ்திரிகள் | சச்சிதாநந்தம். |
| கும்பகோணம் ஸ்ரீ கிருஷ்ண சாஸ்திரிகள் | ஞாநாஞ்ஞாநம். |
| ஷை ஷை | த்வைதாத்வைதம். |
| காஞ்சீபுரம் ஸ்ரீ திருவேங்கடாசாரியார் | யோகம். |

கோவிலூர் வேதாந்த பாஸ்கரர் ஸ்ரீ சுப்பய்ய சுவாமிகள் இயற்றியது.

தீர்த்தன் திரவங்காண் சீர்கண்டங் கண்டங்காண்
பார்த்தும் பிறப்படுக்கும் பாம்புநஜும்—நேர்த்தியதாய்ச்
சங்கான்றன் சம்மதமோ சாந்திச் சுகமீயும்
இங்கான்ற னின்னுருவமே.

காரைக்குடிச் சதாவதானம் பாலசுப்ரமண்ய அய்ய ரியற்றியன.

குணங்களுமோர் மூன்றலவயிற் கொள்பொருளு மூன்றக்
குணம்பொருணீத் தோங்கிக் குறிப்பிற்—கிணங்கும்
பொருளைப் புகலுநன்னூற் புண்ணியநூல் கற்றோ
ரருளைப்பெற் றோரவரா வார்.

11—1

அண்ணு மலைஞாந வாசா னமர்மடமுட்
கண்ணுருங் கண்டுக ளிக்குமடம்—விண்ணுடோ
டெட்டுமடஞ் சிற்றறிவிற் கெட்டா மடமடம்பூ
மட்டிலமெல் லாங்க மடம். 2

கற்கீடா கியமகத்தாற் சீவர்களி னுயிரையென்றுங் கவர்ந்துசெல்லுந்
தெற்கூரா னடுநடுங்குந் திருக்கோவி லூர்க்கோயிற் றென்பால்வைகும்
பொற்கோக னகைபிறந்த பாற்கடல்போ லதிகருசி பொருந்தாநின்ற
விற்கூடும் பெருந்தடத்தின் வடகரையிற் சற்சனர்கள் வியக்குமாறே. 3

ஆண்டவரா கியமுத்து ராமமணி பரம்பரையி லவதரித்து
நீண்டபுகழ் பூண்டமணி யொண்டொடிமா தரைச்சற்று நெஞ்சத்துன்னு
தீண்டுதிருக் களரின்முத்தி பெற்றமணி யம்புயத்தா ளிணையைப்போற்றுங்
காண்டகுசிந் தாமணியண் ணுமலைமெய்ஞ் ஞாநமணி கருத்திலோர்ந்தே. 4

பிரமவித்தி யாப்பிரசா ரணசபையெச் சபைகளுக்கும் பெரிதாமென்று
நிரதிசயா நந்தத்தைப் பெருக்குமென்றும் பிறப்பிறப்பை நீக்குமென்று
மொருகயிலை யங்கிரிபோ லுண்டுபண்ணிக் கடகமதி யுற்றகாலைப்
பெரியவரை வரவழைத்தச் சபைதனிலோவ் வொருநாளும் பேசமுற்று. 5

வேதாந்த வுபந்யாசஞ் செய்வித்த மகிமைதனை விரித்துச்சொல்வேன்
கோதில்லாப் பத்திசிவ மகிமைகுரு மகிமைபஞ்ச கோசத்தன்மை
யோதுமகா வாக்கியத்தி னுயர்மகிமை ஞாநமிதென் றேருபான்மை
பேதமுறுத் தனிச்சச்சி தாநந்தப் பெரும்பெருமை பின்னுஞ்சொல்வேன். 6

மெய்ஞ்ஞாந முதலான விஷயமுமெண் வகையாக விரிவுஞ்சீர்சால்
இஞ்ஞாலத் திலகுகம்பன் கவிநலமுந் திருவிளையாட் டெழிற்பொற்பாவும்
அஞ்ஞாந நிவர்த்திக்கும் மத்துவிதந் துவிதமுந்தே வாரப்பண்ணும்
எஞ்ஞான்று முழங்குதலா லயனுலகு நாணுறவே யிலகுமாதோ. 7

வீரப்ப ஞாநமணி மெச்சியமெய்ச் சீடரின்மா
தீரப்பா வாணர் செறிசபையி—லாரப்பா
சுப்பய்யா சாமியைப்போற் றென்னு னிலையறிந்து
செப்புவார் யார்க்குமரி தே. 8

முத்தி கொடுக்கு முதற்றலத்தி னேடின்ப
நத்தும்பே ரால்விளங்கி நாடோறு—முத்தமநூல்
கற்றோன் பெருமைசொல்வோன் கால்விரலான் முன்பெண்பை
யெற்றினே னின்சயன மே. 9

ஈசன் மகிமைசொன்ன வெல்லா மறைகளுமுட்
கூசவே மாசில்லாக் கோவிலூர்—வாசமதாய்
நண்ணுமரன் சீர்நவின்று னற்கண்ட னூர்ச்சுப்ர
மண்ணிய னும்விப்ர வரன். 10

ஓடாமங் கலத்தாரத்தப் பலியேற்றோ னொருநால்வர்க் குபதேசித்தோன்
கோடாமங் கலம்பூண்டாள் புலிப்பாதன் பதஞ்சலிக்காய்க் கூத்தை வீரத்
தோடாமங் கலந்தாடும் பரன்கூற முயர்ந்தகல்வி சொல்ல வல்லோன்
நீடாமங் கலச்சுப்ர மண்யனெனும் ஞானகன நிபுணன் றனே. 11

அன்னமய கோசம் மழியுமென முன்மறைகள்
சொன்னதைப்புத் தாரிடைவாழ் சுப்பையமா—வின்னம்
பொழிந்தாலும் போதருமோ புண்ணியமல் லாதார்க்
கழிந்தாலும் மெய்ம்மை யதே. 12

ஆகாச மீதுநின்றே யாடுஞ்சி லம்பம்போ
லாகாம காவாக்கி யப்பொருளை—மேகம்போற்
கொட்டினன் குன்றக் குடிவிஸ்வ நாதவரன்
இட்டரல்லா ரும்புகழ வே. 13

மெய்ஞ்ஞான மீதென்றும் வீண்ஞான மீதென்று
மஞ்ஞான மீதென்று மாராய்ந்தே—யிஞ்ஞாலங்
கொண்டாடக் கண்டுரைத்தான் கோவிலூர்ச் சுப்ரமண்ய
பண்டிதன்மா பண்டிதர்தீ பன். 14

மான்மியஞ் சேர்நீடா மங்கலம்வாழ் சுப்ரமண்யன்
றேன்மழையா ருந்நுகர்வீர் சீர்பெறுவீர்—மேன்மே
லெனச்சச்சி தாநந்தத் தின்மகிமை சொற்றா
னெனத்தன்வாழ் கோவிலூ ரில் 15

பொற்பனையாங் கோசலைசெய் புண்ணியநற் காதையெலாங்
கற்பனையாய்க் கம்பன் கவிசெய்தான்—அற்பகலும்
ஆராய்ந் தளவில்பொரு ளாக்கினன் கோவிந்தப்
பேரார் வரதனதன் பின் 16

மாயன் மதத்துதித்தும் வஞ்சகமே யில்லாத
தூயனெனக் கொண்டாடத் தொல்லால—வாயன்
திருவிளையா டற்பொருளைச் செப்பின னிராமன்
அரியநகர் வாழ்வோ னவன். 17

அகத்தறிவும் புறத்தறிவு மவ்விரண்டா லறியறிவு மதுவிதென்றுஞ்
சகத்திலுள பொருளெல்லாஞ் சடமென்றுந் தேர்ந்தெகினஞ் சலமும்பாலு
மிகக்கலத்தல் கண்டுபிரிப் பதுபோலப் பிரித்தெடுக்கு மேதையுள்ளான்
இகத்திலகு குடந்தையில்வாழ் கிருஷ்ணவிப்ர வனென்றே யியம்பினரே

அட்டாங்க யோக மறிவா ரறிதரநேர்
பட்டாலும் ஞாநப் பதஞ்சலியா—லுட்டெளிந்து
சொன்னபடி யேசொன்னன் றூயபுகழ்க் காஞ்சியின்வாழ்
சன்னுதிரு வேங்கடா சார். 19

ஒருதந்தைக் கிருசுதர்க ளுதித்ததுபோற் பிரமத்தி லுதித்த தாக
வருந்துவித மத்துவித மிளையவனே சண்டையில்லான் மௌந முள்ளான்
கருவிலுதி யானென்றே குடந்தையில்வாழ் கிருஷ்ணவரன் கருமேகம்போற்
பிரியமொடு வசனமழை வருஷித்தா னவன்பெருமை பேசற் பாற்றே. 20

இப்பெரும்புண் ணியமெவர்க்கு மிசைதரவே கனமுயற்சி யெடுத்தீடில்லாச்
சற்புருஷன் பொற்கண்ட னூர்முத்து ராமவள்ள றந்தசீராற்
பற்பலமான் களுமீங்கு வாலாறு ருபந்யாசம் பண்ணலானர்
நற்புகழு மேன்மேலும் வளர்ந்துதழைத் தோங்கியதிந் நகரிற்றனே. 21

திருக்கோவி லூர்வாழி யதினமர்ந்து வாளேந்துந் தேவன்வாழி
யருட்பொலியுந் திருநெல்லை யமைவாழி புதல்வர்முத லானேர்வாழி
இருக்குமுதற் கலைவாழி யுபநிடத முழங்குமடத் திறைவனான
தருக்கானன் ணமலமெய்ஞ் ஞாநதரு நீடாயு டழைத்துவாழி. 22



காரைக்குடி M V. கோவிந்தராஜய்யங்கார் இயற்றியன.

கோயிலெனப் பிரமமென வித்தையெனக் குலமறையுங் குறிக்குங்கூற்றைத்
தாயினனி யன்புடையார் தவமுடையார் தாரணியோர் தாத்தை நோக்கித்
தூய்மையெனச் சொல்லடுக்கிப் பலவேறுப் பலநாமஞ் சொல்வா ரேனும்
ஆயிலவை யொவ்வொன்றே யெனக்கண்டோ மறியாதா ரறியா தாரே. 1

அக்கோயி லேதெனிலோ வகத்தூய்மை யறவொழுக்க மருளின் னேக்கந்
தக்கோரைத் திருத்தியவர் தம்முணா வுயர்கலையான் தரிக்கக் காட்டல்
இக்கூறு வாய்த்தவர்வாழ்ந் திகபரத்தி னிதஞ்செய்வா னிறைவி நெல்லை
கட்கேசர் தாள்பணியுந் தனவணிகத் துறவுடையார் கண்ட தாகும். 2

அவ்வூரி லவ்விறைவி யருளுருவை யகக்கண்ணு லாரக் கண்டு
தெவ்வூறு புலன்களைந்த தெள்ளியநற் றுறவுடைய சாமி யேனை
யொவ்வோரு நற்றுறவோர் நற்பணியும் நல்லவையு மொருங்கு நாட்டச்
செவ்வேறு வுளமுடுக்கை வீரப்ப தேசிகனர் செம்மை கண்டார். 3

பண்ணுத பழமறையி னுட்கருத்தைப் பக்குவிகள் பலரா ராய்ந்து
நண்ணுத பாமரரும் நணுகியுபர் நலமடைய நாட்டு வித்தான் (ன்
பிண்ணுக்குப் பணியிறையும் பேண்சபையாம் பிரமவித்யா ப்ரசார ணம்மெ
றண்ணும லைத்துறவு தேசிகனு மகந்தூய்மை யருளி னின்றேன். 4

விவகாரத் துறுபொருளை விவர்த்தமெனு முண்மையினல் விளங்கக் கண்டா
லவகாரத் துறவாகா தகத்தருளே யத்துவிதத் தடுத்து நிற்கும்
பவகாரி மாயைவலிப் பண்படங்கிப் பயந்தோடப் பார்ப்பீர் பாரீர்
திவகாரி நாமென்றே தெளிந்திடலாங் களித்திடலாந் திகைக்க வேண்டா. 5

என்றெங்கும் பரந்ததொரு பிரமத்தை யெல்லாரு மெளிதிற் காண
நின்றிந்தச் சபைநிகழ்த்தும் வித்தையதே நீக்கமிலாப் பிரம வித்தை
துன்னும்பற் றணையூருட் சென்றிதனைத் தெருட்டிமனந் தூய்மை யாக்கி
யின்றேபோ லென்றுமுலாப் பெருங்கோல மிச்சபைபே ரிலங்கி வாழ்க. 6

சுடர்ப்பிழம்பா நின்றபரம் பரன்ஞெழிலின் மூவரெனத் துலங்கக் கண்டாங்
கிடர்ப்பிழம்பு பாரினுள வென்றவற்றை யெங்கென்று இலதே காணக்
கடற்குவமை கலையுரையாற் கணிக்கவருங் காசிகா நந்தச்சாமி
படர்ந்தொளிவீ சுயர்மதியாஞ் சுப்பைய பதத்தோங்கும் பண்பேர் சாமி. 7

இந்நாளைத் தேசிகனே டெந்நாளுங் கூடிமன மிணைந்து நாடித்
தந்நாளிற் றலமெங்குங் கிளைச்சபைகள் வேரூன்றித் தழைக்க நாட்டி
முன்னுளே முதற்கொண்டு முயன்றுவரு முத்ராம முதியா ரோடும்
பின்னுளும் பொன்னுளாப் பெருக்கமுற ஞானநலன் பெருக்கி வாழ்க. 8

ஆவாழி யறம்வாழி யறந்தெரியந் தணர்வாழி யகிலம் வாழித்
தேவாழித் திருநெல்லைத் திறம்வாழி திருந்திவருந் தெருளோர் வாழிக்
கோவாழிக் கோலுயர்த்துங் குலம்வாழிக் குறிநடக்குங் குடிகள் வாழிப்
பூவாழிச் சபைவாழிப் புண்ணியநல் லங்கத்தார் பொருந்த வாழி. 9



வலயபட்டி தமிழ்ப்பண்டிதர் நேடுவை

திரு. இராமஸ்வாமி அய்யங்கார் இயற்றின.

தெய்வநறுந் தமிழினியல் தேற்றவெதி பேற்றமுறுந் திரைநீர்த்தாய
வையைதவழ் தென்னுட்டுள் வையமுளத் தின்னுட்டு மாண்பிற்றுகிக்
கைதவந்தி ரத்துவிதங் கருதெவரு நத்துவிதங் கஞலியாண்டு
மூய்தவமே யெய்தவந்தி ருயர்கதியென் றயர்வுதெறு முறுவர்ச்சார்ந்தே. 1

இனிமையொளி நந்நீர்மை யியலொழுக்கால் வளச்சொற்கே யியைவதான
கனிதருமத் தேனதிபோற் கவின்குரவர் பலர்கலந்த காட்சித்தாகிப்
பனிவருமொண் விதுவையணி பவன்கயிலை யிதெனலாம் படிவாய்ந்தெந்த
மனிதருங்கண் டுவந்திடுகற் பணியுடன்பொற் பணிவயங்கி வாய்ப்பதாகி. 2

திகழ்சிறப்பார்ந் திடுகோயி லூரென்றே ரடையுமுருத் திரத்திஞேங்கி
யுகள்கயல்சே ரொண்டடஞ்சூ முயர்தலக்கண் ணுமைகேள்வற் குவந்தவன்
புகழ்பெறுதே சிகனுகிப் பூண்டதவத் தாண்டவர்முற் புனிதர்சார்பிற் [பாற்
சகமகிழ வருவீர ஞானசே கரன்பதசே கரன்தா ஞேனேன். 3

அன்னவன்ற ளியாரெனினிங் கரைகுவங்கேண் மின்புலவீ ரடைந்தோர்க்
கெல்லாம், இன்னமுதம் வேதாந்தத் தியலமுது மினிதருத்தி யிறையாஞான
நன்னயந்தேற் றுறுநலத்தான் நன்னுட்டுக் கோட்டைநக ரத்தாற்கென்றும்
துன்னியநற் கேளாகத் துலங்குமடா லயன்றுறவோர் சூழவாழ்வோன். 4

ஆகியவண் ணாமலைசா மிப்பெயரி னமைகுரவ னான்மவர்க்கம்
சேகறுமே லாம்பதத்தைத் தெளிந்துய்ய வுளத்தெண்ணித் திகழுலோக
போகியாய் நிலவுபரி பூரணன்யா னெனுமதத்தின் பொற்பிற் கேற்ப
மோகமிலா முழுஞாநத் தவர்முதலா மோதமுற முன்னியிந்நாள். 5

சொல்வண்மை யுறும்ப்ரசங்கத் துறைதெரிசுப் பையசாமி தூயநூலிற்
செல்வண்மை செறிதருகா சிகாநந்த ஸாமிதுணை சேரவந்நோக்
கில்வண்மை செலுத்துகண்ட னூர்முத்தி ராமையா விசைப்பத்தேசம்
நல்வண்மை யுறவேதாந் தானந்த சபையொன்று நாட்டினானல் 6

இத்தகைய வுயரவையு மிதற்குரிய பாலகரு மிதனைச்சாரும்
அத்துவித நிலையினரா யமைகுநரு மவர்ப்பேணு மாற்றல்சான்ற
உத்தமநம் வணிகர்களு மோங்கந்தண் ணறிஞர்களு முலவாதென்று
மெத்துதிரைப் புணரிசுலாம் வியனிலனிற் சயநிலவ விளங்கிவாழி. 7

வேம்பத்தூர் ஸ்ரீ சௌந்தரபாரதி அவர்கள் இயற்றியது.

மாமேவு கற்பகத் தருவினுறை யிந்த்ராதி வானவர்கள் வந்துபோற றம் மகிமைத் திருக்கோயி லூர்ச்சாலி வாடீச்சு வரிசமே தன்சரணையும், நாமேவு ஞாநசற் குருமலர்த் தாளையு நாடொறு மனத்திலெண்ணி நற் பொருட் கலைஞாந முணருமண் ணாமலை ஞாநதே சிகன்மதித்தே, மீமேவு மயனுமாச் சரியப் படப்பிர்ம வித்யாப்ர சாரணசபை வித்தகத் துடனமைத் துக்கல்வி மான்களை விருப்பமுடன் வரவழைத்துப், பாமேவு வேதாந்த சாஸ்தரப்ர சங்கமிகு பாங்குட னியற்றவைத்தே பலனுறக் கேட்டுவேந் தாநந்த முற்றுநிதி பாலித்தனன் வாழியே.

கண்டனூர் நா. பெ. நா. முத்துராமன் செட்டியா ரியற்றியது.

சிற்றறிவுள்ள யான் கூறுவதைப் பேரறிவுள்ள மகான்கள் குணமாக அங்கீகரிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்.

சீர்மேவு மிராக்ஷஸ வருடத்தி லாடிமதி தேதியிரு பத்தைந்தினிற்
பார்மேவு கோவிலூர்த் திருநெல்லை நாயகி பாங்கான வுத்ஸவத்தில்
ஏர்மேவு பிரமவித் தியாப்ரசா ரணக்கட் டடமிருந் தன்புகூர்ந்தே
ஆர்மேவு சாதுக்கள் செயுபந்நி யாசத்தி னருமையைக் கூறுவாமால்.

"சத்தே - பர - கண்ணுதலும்" என்னும் வாசிட்டக் கவியின்படி சிவபெருமான் காருண்யத்தினால் ஆன்மகோடிகளுய்யும்பொருட்டுக் கைலையினின்றுங் கழனியம்பதியாகிய கோவிலூரின்கண் தனவைசியர் முதலிய அடியார்களுக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்னும் புருடார்த்தம் நான்கு முண்டாகும்படி ஆண்டவ ரென்னுஞ் சிறப்பு நாமம்பெற்ற ஸ்ரீ முத்திராமலிங்க ஞாநதேசிகரா யெழுந்தருளி மேற்கூறிய வடியார்களுக்கு அத்துவித சாஸ்திரவாயிலாக பெரிதுக்கெல்லாம் பெரிது பிரமவித்தை யென்று ஞாநோபதேசஞ் செய்து நடைபெற்று வந்ததில் அநேகம் அடியார்கள் சூழப்பெற்றுச்சிலர் சிரவண மநந நியாந சமாதியை யடைந்து சீவன்

முத்தர்களாயிருந்து தமாதசிரியருக்கொப்பச் சீடர்களுக்கு ஞான சாஸ்திராதிகளை யுபதேசித்தும் சிவாலய முதலிய சத்காரியங்கள் செய்வித்தும் வந்தது யாவருக்குந் தெரிந்த விஷயமாம்.

மேற்கூறிய ஆசிரியர்காலமுதல் மிக்க பிரபலமான ஸ்ரீ. வீரசேகர ஞான தேசிகரவர்கள் காலம் வரையிலும் நாளுக்கு நாளபிவிர்த்தியாய் வருங்கால் சிலர் கலி வல்லமையினால் ஞானமார்க்கத்தின் மகிமையை யுணராது, பல மார்க்கங்களிற் செல்வதையும் சிலர் வீண் காலக்ஷேபம் பண்ணுவதையும் இப்போது எழுந்தருளிய நமது ஸ்ரீ அண்ணாமலை ஞானதேசிகரவர்களுணர்ந்து அவர்கள் ஞானமார்க்கத்திற் செல்லும்படி செய்வதற்கு முக்கிய காரணஞ் சாதுசங்க மென்றுஞ் சாது சங்கங் கூட்டுவதற்குச் சபை ஒன்று ஏற்படுத்த வேண்டுமென்றுஞ் சிந்தித்து, சென்ற ஆண்டிலேற்படுத்திய இப்பிரஹ்மவித்தியா ப்ரசாரண சபையில் இந்த ஆண்டு ராக்ஷதவூ ஆடிமீ 25உ திங்கட்கிழமை ஸ்ரீ திருநெல்லைநாயகி உத்ஸவத்தில் ஆருந் திருவிழா முதல் ஆவணிமீ 3உ வரையில் இப்போது மிக்க வற்புதமாய் நிர்மாணஞ் செய்திருக்கிற பிரஹ்மவித்தியாப்பிரசாரண சபைக் கட்டடத்தில் சாதுக்கள் சாஸ்திரிகள் முதலானவர்களை மிக்க வுபசாரத்துடன் வருவித்து உபந்நியாசம் நடத்தினதில் அவரவர்கள் சுருதியுக்தியநுபவாநுசாரமாக மகாவாக்கிய முதலிய ஞான சாரங்களை எடுத்து விளக்கினார்கள். அதனது பெருமையை யெடுத்துக் கூறுவதற்கு ஆயிரம் நாவோடுங் கூடிய ஆதிசேஷனுக்கும் அநேக காலஞ்செல்லும். நமது ஆதீனத்து ஸ்ரீ சுவாமியவர்கள் சபையேற்படுத்தினது சாதுக்கள் சாஸ்திரிகள் முதலானவர்களால் உயர்வான அரியபெரிய விஷயங்கள் உபந்யாசிக்கக்கூடுமென்று மப்படி உபந்யாசஞ்செய்யுங்கால் இம்மார்க்கத்தின் உண்மைதெரிந்து ஜனங்கள் செல்வார்களென்னு மபிப்பிராயமாம்.

அப்படி இம்மார்க்கத்திற் செல்ல சிரத்தையுள்ளவர்களுக்குச் சோவிலூரின்கண்ணே சுருதி குரு சுவாநுபவம் சிவகாருண்யம் ஈசுவரபக்தி பாசவைராக்கியம் பிரஹ்மஞ்ஞானமுமுள்ள சாதுக்கள் வாசமுஞ் சாஸ்திர ஆராய்ச்சியுஞ் க்ஷேத்திர மகிமையும் மூர்த்தி தரிசனமும் பாடசாலை வித்தியாசாலை முதலிய சகல வைபவங்களும் உணவாதி சௌகரியங்களுங் கடவுள் கிருபையினால் அமையப்பெற்றிருத்தலால் யாவரு மிப்பிரஹ்மவித்தையை இச்சந்நிதானத்தி லநுஷ்டித்துக் கிருதார்த்தாளாகும்பொருட்டும் இச்சபை நாளுக்குநாள் அபிவிர்த்தியாகும் பொருட்டும் ஸ்ரீ திருநெல்லைநாயகி சமேதசொர்ணவாளீஸ்வரரையும்நமது ஆதீனத்து ஸ்ரீசுவாமிகளையும் சாதுக்களையும் சாஸ்திரிகள் முதலானவர்களையும் பிரார்த்தித்து வணக்கமாய் வேண்டிக்கொள்ளுகிறேன்.

திருமேவு சோவிலூர்த் திருநெல்லை யுத்ஸவச் சிறப்புத்தோன்ற
பொருள்மேவு பிரஹ்மவித் யாப்பிரசா ரணசபையிற் புனிதமாக
அருள்மேவு மறிஞர்பலர் செயுமுபந் யாசமதை யறிந்துகூறப்
பிரமையுறிற் பிரமனுமே பின்னிடுவன் யான்கூறப் பெரிதுமாதோ.

❧

# புத்தக விளம்பரம்.



| | | |
|---|---|---|
| கைவல்யம் - பொன்னம்பல சுவாமிகளுரை | 2 | 0 |
| பகவத்கீதை - பொன்னம்பல சுவாமிகள் உரை | 2 | 0 |
| கைவல்யம் - சச்சிதாநந்த சுவாமிகளுரை | 1 | 4 |
| தருக்காமிர்தமும் - பிரஸ்தான பேதமும் | 0 | 8 |
| வேதாந்த சாராமர்தமும் அத்துவித ரசமஞ்சரியும் | 0 | 6 |
| ஸ்ரீ சங்கரத்து வேஷியரின் வாய்பூட்டு | 0 | 6 |

வேதாந்தசாஸ்திர ரத்னுவலி - இதில் நாநாஜீவவாதக்கட்டளை, கீதா சாரத் தாலாட்டு, சசிவன்னபோதம், மகாராஜா துறவு, வைராக்ய சதகம், வைராக்யதீபம், லக்ஷுணுவிர்த்தி, வேதாந்த சூடாமணி, கைவல்யநவநீத[illegible] ஆக 9 புத்தகங்கள் அடங்கியிருக்கின்றன. (பாக்கெட் சைஸ்) 1 [illegible]

| | ரூ. | அ. | | ரூ. | அ. |
|---|---|---|---|---|---|
| பஞ்சதசி(2வால்யம்) | 10 | 0 | பிரபோதசந்திரோதய-வசனம் | [illegible] | [illegible] |
| சிவமஹாபுராணம்-வசனம் | 5 | 0 | பஞ்சதசப்பிரகரணம் | [illegible] | [illegible] |
| விருத்திப் பிரபாகரம் | 4 | 0 | விருத்தி ரத்னுவலி | 0 | [illegible] |
| வேதாந்தமநந சிந்தாமணி | 4 | 0 | மெய்ஞ்ஞானபோதம் | 0 | 1[illegible] |
| நியாயப் பிரகாசம் | 4 | 0 | வேதப்பொருள் விளக்கம் | 0 | 12 |
| தாயுமானவர்-உரையுடன் | 3 | 4 | பாடுதுறை | 0 | 12 |
| விசாரசாகரம் (3வது பதிப்பு) | 3 | 4 | பஞ்சதசி செய்யுள் (பாக்கெட்) | 0 | 10 |
| சிவரகசியம்-வசனம் | 3 | 0 | வேதாந்த பரிபாஷை | 0 | 10 |
| பெருந்திரட்டு-குறுந்திரட்டுடன் | 3 | 0 | திருவாசகம் (பாககெட்சைஸ்) | 0 | 10 |
| பிரபுலிங்கலீலை - உரையுடன் | 2 | 8 | குமாரதேவர் 16 சாஸ்திரம் | 0 | 10 |
| ,, ஷை வசனம் | 0 | 12 | ஞானதரிசினி | 0 | 10 |
| தத்துவாநு சந்தானம் | 2 | 8 | தத்துவதரிசினி | 0 | 10 |
| சர்வதர்சன சங்கிரகம் | 2 | 8 | ஞானத்திரட்டு-2-ம் பாகம் | 0 | 8 |
| திருவாசகம் - உரையுடன் | 2 | 0 | வியாசதாத்பர்ய நிர்ணயம் | 0 | 8 |
| ஞானவாசிட்டம் (உரையுடன்) | 2 | 0 | நைஷ்கர்மிய சித்தி | 0 | 8 |
| மதவிருட்சம் 3 பாகம் | 1 | 12 | வேதாந்தசித்தாந்தசாரசங்கிரகம் | 0 | 8 |
| இந்துபைபில் சத்தியவேதம் | 1 | 12 | சித்தாந்த பிந்து | 0 | 8 |
| ஞானவாசிட்டம்-வசனம் | 1 | 8 | முத்திசோபானம் | 0 | 8 |
| வள்ளலார் சாஸ்திரம் | 1 | 8 | விவேக சூடாமணி (பாக்கெட்) | 0 | 8 |
| அரிச்சந்திரபுராணம்-வசனம் | 1 | 8 | பாகவதத்திரட்டு | 0 | 6 |
| சூதசங்கிதை மூலம் | 1 | 8 | ராஜயோக பாஷ்யம் | 0 | 4 |
| பகவத்கீதை - வசனம் | 1 | 4 | வேதாந்த டிண்டிமம் | 0 | 4 |
| வேதாந்தசூளாமணி-உரையுட | 1 | 4 | தோடகம் | 0 | 4 |
| விவேகாநந்தவிஜயம் | 1 | 4 | அறிவானந்த சித்தியார் | 0 | 4 |
| தாயுமானவர்பாடல் குறிப்புரை | 1 | 0 | மஹாராஜா துறவு-வசனம் | 0 | 3 |
| பட்டணத்தார் பாடல் | 1 | 0 | கைவல்யம் (பாக்கெட்சைஸ்) | 0 | 3 |
| சூதசங்கிதை-வசனம் | 1 | 0 | வேதாந்த சூளாமணி ,, | 0 | 2½ |
| சங்கர விஜயம் | 1 | 0 | மநநமாலை | 0 | 2 |
| ரிபுகீதைத் திரட்டு | 1 | 0 | திருக்குத் திருசிய விவேகம் | 0 | 2 |
| தருக்க பரிபாஷை | 1 | 0 | பிரஹ்மானந்தலகிரி | 0 | 1 |

லோகோபகாரி ஆபீஸ்,
சோமஸேசுவரன் பேட்டை, சென்னை.



கோவிலூர் மடாலயம், சிதம்பர ஞான தேசிக சுவாமிகள்.